உ

சிவமயம்.

தேவிசகாயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமுல்லைவாயில் கொடியிடைநாயகியந்தாதி.

இஃது,

காவை யகிலாண்டநாயகி யுபாசகியும்

சிதம்பரம் - தளவரிசை - ஆயுள்வேதபாஸ்கரர்

சுப்பிரமணியப் பண்டிதரவர்கள் மாணுக்கரு ளொருவளும்

ஆகிய

சென்னைநகர் - பண்டிதை

**ஸ்ரீமதி - ம - மனோன்மணியம்மாளால்**

இயற்றப்பட்டு,


சென்னை:

இந்துதியலாஜிகல் யந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

கரவருடம்-சித்திரைமீ

1891.

உ

சிவமயம்.

தேவிசகாயம்.

திருச்சிற்றம்பலம்.



# திருமுல்லைவாயில்

# கொடியிடைநாயகியந்தாதி.

இஃது,

காவை யகிலாண்டநாயகி யுபாசகியும்

சிதம்பரம் - தளவரிசை - ஆயுள்வேதபாஸ்கரர்

சுப்பிரமணியப் பண்டிதரவர்கள் மாணாக்கரு ளொருவளும்

ஆகிய

சென்னைநகர் - பண்டிதை

ஸ்ரீமதி - ம - மனோன்மணியம்மாளால்

இயற்றப்பட்டு,



சென்னை;

இந்துதியலாஜிகல் யந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

கரவருடம்-சித்திரைமீ

1891.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சாத்துகவிகள்,

சிதம்பரம்

## ஸ்ரீமத் - நடராஜமூர்த்திதீக்ஷிதசுவாமிகளருளியது.

𑌵𑌲𑍍𑌲𑍀𑌮𑌧𑍍𑌯𑌾𑌂𑌶𑌿𑌵𑌾𑌙𑍍𑌗𑌾𑌮𑌪𑌿𑌨𑍁𑌤𑌰𑌸𑌨𑌾𑌂𑌸𑌤𑍍𑌕𑍃𑌤𑌿𑌂𑌸𑌤𑍍𑌕𑌵𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑍈
𑌨𑌾𑌨𑌾𑌲𑌙𑍍𑌕𑌾𑌰𑌯𑍁𑌕𑍍𑌤𑌾𑌮𑌪𑌿𑌨𑌵𑌪𑌦𑌕𑌾𑌮𑌾𑌨𑌯𑌾𑌨𑍍𑌮𑌾𑌲𑌿𑌕𑌾𑌂𑌵𑌾।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌧𑍍𑌯𑌾𑌂𑌵𑌾𑌕𑍍𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑍇𑌚𑌤𑍁𑌰𑍍𑌮𑍁𑌖𑌮𑌹𑌿𑌷𑍀𑌯𑌦𑍍𑌦𑌯𑌾𑌸𑌹𑌾𑌯𑌾𑌂
𑌨𑌾𑌮𑍍𑌨𑌿𑌶𑍍𑌰𑍀𑌮𑌨𑍍𑌮𑌨𑍋𑌨𑍍𑌮𑌾𑌨𑍍𑌮𑌣𑌿𑌪𑌦𑌵𑌿𑌲𑌸𑌦𑍍𑌰𑍂𑌪𑌭𑌾𑌕𑍍𑌚𑍇𑌨𑍍𑌨
𑌪𑍁𑌰𑍍𑌯𑌾𑌂.

வல்லீமத்யாம்சிவாங்தாமபி நுதரசநாம்சத்க்ருதிம்ஸத்கவீந்த்ரை
நாநாலங்காரயுக்தாமபிநவபதகாமாநயாந்மாலிகாம்வா॥
ஸ்ரீமத்யாம்வாக்ப்ரசங்கேசதுர்முகமஹிஷீயதெயாஸபாயாம்
நாம்நிஸ்ரீமந்மநொந்பாந்மணிபதவிலஸத்ரூபபாக்சென்னபுர்யாம்.

முருகதாசசுவாமிகளென்றும், திருப்புகழ்ச்சுவாமிகளென்றும்,
விளங்குகின்ற

## ஸ்ரீமத் - தண்டபாணிசுவாமிகளருளியது.

அல்லைக் கொடிக்கிட மாங்கண்ம ஞேன்மணி யானசெல்வி
தொல்லைக் கொடிய வினைவேர் களைந்துயச் சூழ்ச்சியினுற்
கல்லைக் கொடிகன் றெறிந்தாற்கும் வீடருள் காரணர்வாழ்
முல்லைக் கொடியிடைக் கந்தாதி நன்கு மொழிந்தனளே.

திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனம்
திருவாமாத்தூர்வாசம்

## ஸ்ரீமத் - சுப்பிரமணியத்தம்பிரான்சுவாமிகளருளியது.

சீராருந்தொண்டைமான்சிந்துரத்தைக்கற்புவல்லிசிக்கயாத்த
கூராரும்புறவநகர்கொடியிடைநாயகிதாளிற்கூர்ந்தவன்பாற்
பாராரும்பண்டிதரும்வியப்புறவந்தாதிப்பாப்பகர்ந்திட்டாளா
லேராரும்பண்டிதைமனேன்மணியாளெழிற்றிருவோடிணையாமன்னே.

தசாவதானம்

## பேறை - செகநாதப்பிள்ளையவர்களியற்றியது.

உளம்பூத்தவுவகையொடு திருமுல்லைக்கொடியிடையாருநறுந்தாட்கேமத்
தளம்பூத்தவிருமருங்குந்திகழ்மோனையந்தாதித்தகையமாலை
குளம்பூத்தபாகமென்கோசொற்பொருளாந்தொடைநயங்கள்குலவியாப்பின்
வளம்பூத்தமேகமென்கோமண்ணைமனோன் மணியுரையின்வகையைத்தேர்ந்தே.

திருவனந்தபுரம் மஹாராஜாகாலேஜ் ப்ரொபிசர்

## பி - சுந்தரம்பிள்ளையவர்கள். யம் - ஏ.

இயற்றியது.

கொடியிடை வான்றவிழ் மண்ணைமனோன்மணி கூறுமிந்தக்
கொடியிடை நாயகி யந்தாதி கேட்குங் குவலயத்தீர்
துடியிடை மாதென வெள்ளன்மின் புத்தியித் தூலமன்றோர்
துடியிடை யேயல வோபண்டு சூத்திரந் தோற்றினவே.

மஹாவித்வான் - அரன்வாயல்

## வேங்கடசுப்புப்பிள்ளையவர்களியற்றியது.

கலித்துறை யந்தாதி தந்தான் பெறமுல்லைக் கௌரியின்மேற்
கலித்துறை யந்தாதி தந்தாய் மனோன்மணி கண்டனளி
கலித்துறை யந்தாதி தந்தா ளெனவழக் காறெய்திடேல்
கலித்துறை யந்தாதி தந்தா யருளுங் கணித்துநெஞ்சே.

திருமயிலை - வித்துவான்

## சண்முகம்பிள்ளையவர்களியற்றியது.

தண்காட்டுமலர்த்தடஞ்சூழ்வடமுல்லைத்தலங்காட்டுந்தழல்கானெற்றிக்
கண்காட்டும்பெருந்தகையைவலங்காட்டுங்கொடியிடைமேற்கனிவிற்காட்டும்
பண்காட்டுமொழிபுணர்ந்தோரந்தாதிதொடுத்தளித்தாள்பங்கயத்தோர்
பெண்காட்டும்புகழ்காட்டுமனோன்மணியாமொருமாதுபெரிதுமாதோ.

ஊற்றுமலைச்சமஸ்தானவித்துவான்

## தி-கந்தசாமிப்புலவரவர்களியற்றியது.

குடிமிடையந்தாதிபொருளாதியுளோமெனச்செருக்குங்குணர்பாற்சென்றோர்
பிடியிடையந்தாதிரநூலாடையென்றேற்காதபெரும்பேற்றைத்தன்சே
வடியிடையந்தாதினலனைச்சொரிவோர்க்கருளுமுல்லைவாயிற்செல்வக் [னே
கொடியிடையந்தாதிபகர்ந்தாண் மெய்மனோன்மணி யெனும் பூங்கோதைமன்

அஷ்டாவதானம்

## பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்களியற்றியது.

பண்டிதையாவருமனோன்மணிநவிலந்தாதியெனும்பசுந்தமிழ்யாப்
பண்டிதையாவருங்கண்டுவியந்தணியோர்ந்தகலாதபட்சத்துண்ணுப்
பண்டிதையாவருணிப்பர்சரதமிந்நூல்பகர்வனபோற்பரமற்றொண்டர்ப்
பண்டிதையாவருள்கவென்பர்திருமுல்லைக்கொடியிடையாள்பதம்விழைந்தே.

யாழ்ப்பாணம் திருக்கோணமாமலை

## ச - சரவணமுத்துப்பிள்ளையவர்கள். பி - ஏ.

இயற்றியது.

நந்தமிழ் பெண்கள் கல்வி நலமில னெனுஞ்சொற் பொய்ப்பக்
கொந்தலர் முல்லை வாயிற் கொடியிடை யம்மை மீதே
சந்தமும் பொருளுஞ் சொல்லுஞ் சகலமு மினிது வாய்ப்பச்
செந்தமி ழுரைத்தாண் மண்ணை மனோன்மணிச் செல்வி யாதோ.

மஹாவித்வான் புரசை - அஷ்டாவதானம் - சபாபதிமுதலியார் மாணக்கர்

## தண்டலம் - பாலசுந்தரமுதலியாரவர்க ளியற்றியது.

கார்கொண்டவாணவக்கருவனறயிலிருவினைக்கயிற்றில்யாப்புண்டுபெசியாற்
கலங்கிடக்கிடந்தவிஞ்ஞானகலராதிக்கவின்மூவகைப்பசுவினை
ஏர்கொண்டமுல்லையங்கானிற்கொணர்ந்துநின்றெவ்வமதகற்றமேய்த்தே
யெண்ணருந்தனுவாதியாம்பசும்புல்லீந்திலங்கருட்புனல்காட்டியே
பேர்கொண்டதன்னடித்தொழுவத்திருத்தும்பிரான்மாசிலாமணியெனும்
பேரண்டர்நாதன்வாமத்தமர்ந்தென்றுமிப்பேதையேனுள்ளமேவும்
வார்கொண்டபூண்முலைக்கொடியிடைச்சிக்கேவழங்கினளந்தாதிநம் [லரோ.
மண்ணைமருபெண்ணமுதமென்னவிலகும்மனோன்மணியென்னுமடவர

சென்னை வீரசைவசமயாபிவிர்த்தி சபாப்பிரசங்கியார்

## திருமழிசை - வடிவேலுமுதலியாரவர்களியற்றியது.

தக்கனைய சிரக்கசத்தின் றலையளித்த சங்கரன்றன் றாள்க ணெஞ்ச
கக்கனைய வழிபடுவோ ருறைமுல்லை வாயினகர்க் கவுரி யுள்ளு
வக்கனைய முளதெனற்கே லாதவொரந் தாதியினை வழுத்தி னளா
லிக்கனைய மொழித்தமிழான் மண்ணைநகர் மனோன்மணியா மியல்வல்லாளே.

தில்லைவிடங்கன் - வெண்பாப்புலி

## சு - வேலுசாமிப்பிள்ளையவர்களியற்றியது.

அந்நாளிலவ்வையெனுமணங்கரசியளவி னூலன்பிற்செய்தாள்
இந்நாளினல்லாரிலில்லெனும்பேரில்லெனவேயிசைத்தணிந்தாள்
அன்னாளின்மனோன்மணியென்றவனியெலாம்புகழ்ந்தேத்தியறையுஞ்சீர்
இன்னாளின்புறமுல்லைக்கொடியிடையாட்கந்தாதியியற்சொன்மாலை.

திருவையாறு
## அ - முத்துசாமிபாரதியாரவர்களியற்றியது.

பூமேவுமகிலாண்டமீன்றருளுமம்மைபெரும்புகழ்விளவித்
தேமேவுகடுக்கைமுடிப்பரன்முறுவல்செயநாணித்திகைத்துவாணி
பாமேவுதிருத்தொண்டர்தமிழ்பாடிநலமியைந்தபண்பையோர்ந்து
மாமேவுவடமுல்லைக்கொடியிடைநாயகிபெருஞ்சீர்வழுத்தவெண்ணி.

மண்ணுலகின்மண்ணைநகர்வந்துமனோன்மணிநாமம்வயங்கமேவி
யெண்ணரியகலைகளுணர்ந்தறிவொழுக்கம்பொறைசுகுணமியைந்துநாளும்
அண்ணியவன்பாற்செய்தரங்கேற்றியவந்தாதிநயமனைத்துநோக்கி
நண்ணுபுலவோர்வியப்பதன்றியிணையாதெடுத்துநவிலற்பாற்றே.

சென்னை இந்துஜனபூஷணி பத்திராதிபர் - திருமயிலை
## வி - சுந்தரமுதலியாரவர்க ளியற்றியது.

பன்னுளும்புகழ்பரவுமுல்லைமாசிலாமணியின்பைந்தாண்மீதி
லந்நாளிற்சிவஞான முனிவரனோரந்தாதியறைந்ததேபோ
லிந்நாளிற்கொடியிடையாட்கதுபோன்றநூலதனையின்பாய்ச்சொற்றுள்
பொன்னுளையேநிகருமனோன்மணிப்பண்டிதையாகும்பூவைமாதோ.

கருவூர் - வித்வான்
## தி - மா - அப்பாவுப்பிள்ளையவர்க ளியற்றியது.

திருமுல்லையணிகவினொருநால்வர்செவிமடுத்துச்சிந்தைதேறத்
திருமுல்லைநிறைகலைமாதன்னமனோன்மணியன்பின்றிறத்தைச்சேர்த்துத்
திருமுல்லைநிலத்தாரிற்றிருடனரியயன்முதலோர்தேர்ந்துள்ளேத்தத்
திருமுல்லைவாயிலமர்கொடியிடைக்கோரந்தாதிசெய்திட்டாளால்.

மஹாவித்வான் அரன்வாயல் வேங்கடசுப்புப்பிள்ளை சோதரர்
## அ - தங்கவேலுப்பிள்ளையவர்களியற்றியது.

திராவிடமார்தனைய திறன்மனோன்மணியாம்பண்டிதைசத்தியமாத்தீதெ
திராவிடமாத்னையமுல்லைக்கொடியிடையாள்சரணமெனத்தேர்ந்தன்பேமு
திராவிடமாதனையலறத்தரும்பனையந்தாதியின்சீர்தெரிவைபாற்றூ
திராவிடமாதனையருந்தோழமையருள்வானிகர்முனிவன்செப்பற்பாற்றே.

அஷ்டாவதானம் - பூவை - கலியாணசுந்தரமுதலியார்மாணுக்கர்
## காஞ்சி - நாகலிங்கமுதலியாரவர்களியற்றியது.

முல்லைநகைத்தேரையர்வயித்தியச்செந்தமிழ்க்கடலைமுழுதுமுண்ட
முல்லைநகைமனோன்மணியாம்பண்டிதைபற்பலவணியுமுயங்கச்சொற்ற
முல்லைநகைக்கொடியிடையாளந்தாதியெனுநூலைமுறையினுய்ந்து
முல்லைநகையனைத்தினையும்வாணியல்லால்வேறொருவர்மொழிதற்பாற்றே

கோபாலசமுத்திரம் - வித்துவான்

## சண்முகதாசப்பிள்ளையவர்களியற்றியது.

ஒருமைகொண்டமனப்புனிதச்சிவநேசர்சங்கமிகுத்தோங்குஞ்சீர்த்திப்
பெருமைகொண்ட திருமுல்லைவாயிலமர்கொடியிடையெம்பிராட்டிதாண்மே
லருமைகொண்டநறுந்தேனின்னமுதமெனக்குலவுநலமமைந்தபண்பிற்
கருமைகொண்டகுழற்பொறிநேர்மனோன்மணியோரந்தாதிசழறினாளால்.

அஷ்டாவதானம்-பூவை-கலியாணசுந்தரமுதலியார் மாணாக்கர்

## வல்லை - சண்முகசுந்தரமுதலியாரவர்க ளியற்றியது.

வாடாதமல்லிகைமுன்வாசமுளமல்லிகைசீர்மானுமாபோன்
மாடார்மக்களிற்சிறப்பர்கற்றவராயினுமதனுண்மண்ணைதன்னில்
கோடாமனோன்மணிபண்டிதையருளார்வடமுல்லைக்கொடியிடைக்குப்
பீடாரந்தாதிசொலல்பொன்மலர்க்குநாற்றமுறும்பெற்றித்தாமால்.

காஞ்சிபுரம் - கச்சபாலையர் மாணாக்கர் - சைதாப்பேட்டை

## திரு - நாராயணசாமிமுதலியாரவர்க ளியற்றியது.

படியிடைநாடெழில்செய்மண்ணைமனோன்மணியாம்பண்டிதைநற்பனுவலாட்டி
துடியிடைநாரியர்குழுவுக்கருங்கலம்பேதைமையாமென்றுரிசாருஞ்சொல்
லிடியிடைநாலாதகற்றியெவர்க்குமணிகலங்கல்வியென்னமுல்லைக்
கொடியிடைநாயகிமலர்த்தாட்கதிமதுரவந்தாதிகூறினாளால்.

சென்னை சைவசித்தாந்தத் தமிழ்வேத சபையாருளொருவர்

## மயிலை - தணிகாசலமுதலியாரவர்களியற்றியது.

திருமுல்லைப்பதியிலுயிர்க்கருள்சுரக்கவெழுந்தருளுஞ்சிவனார்க்கின்பந்
தருமெல்லைக்கொடியிடையெம்மன்னைதனக்கந்தாதிதமிழிற்சொற்றாள்
வருமெல்லைநாணிதமுங்காவைநாயகியடியைக்கருதியேத்தும்
பெருகுல்லைவளர்மண்ணைமனோன்மணிப்பண்டிதையாகும்பெருமையாளே.

தண்டையார்பேட்டை

## க-வ- திருவேங்கடநாயுடவர்க ளியற்றியது.

பிடியிடையார்நாயகமாமனோன்மணிப்பண்டிதைமாதுபேசுமுல்லைக்
கொடியிடையாளந்தாதிசெந்தமிழுக்கிருப்பிடமாக்குலவக்கண்டு
படியிடையார்கவிஞரொலாங்கொண்டாடியிறும்பூதுபலவாய்க்கூறி
நடியிடையாராதலினுறுனொருவனதன்பெருமைநவில்வதென்னே.

காஞ்சிபுரம் - நாகலிங்கமுதலியாரவர்கள் கனிட்டகுமாரர்

## கா-மாணிக்கவேலுமுதலியாரவர்களியற்றியது.

எமையாளுஞ்சிவஞானமுனிவர்நவிலந்தாதியேற்றுத்தொண்டர்
தமையாளுமுல்லைநகர்மாசிலாமணிப்பெருமான்றழுவும்பச்சை
யுமையாளுண்மகிழ்தமிழந்தாதியினைமனோன்மணிநன்குவந்துசொற்றாள்
செமையாளும்பண்டிதசுப்பிரமணியன்பாற்றமிழ்தேர் சிறப்பான்மன்னே.

அஷ்டாவதானம் - பூவை - கலியாணசுந்தரமுதலியார் மாணாக்கர்
சிவஞானவைதீக வாயுள்வைத்தியர்

## சி - நடராஜமுதலியாரவர்க ளியற்றியது.

விண்ணைமுழமிடுஞ்சோலைசூழ்முல்லைக்கொடியிடையாம்விமலைமீதின்
மண்ணைநகரவதரித்தமனோன்மணிப்பண்டிதையாகுமாதுரத்னங்
கண்ணைநிகரந்தாதிகலித்துறையிற்சொற்றிட்டகவினைக்கண்டு
மண்ணைமுடிமேற்சுமக்கக்கீழுலகந்தனிற்சேடன்மறைந்திட்டானல்.

பச்சையப்பன் காலேஜ் வித்துவான் கிருஷ்ணசாமிமுதலியார் மாணாக்கர்

## சென்னகேசவலுநாயுடவர்க ளியற்றியது.

எல்லைபலநூலாலுமிசைக்கவொணாப்பெரும்புகழையியைந்திட்டோங்கு
முல்லைநகர்க்கொடியிடையாட்கந்தாதிகட்டழகாய்மொழிந்திட்டாளால்
இல்லையிலைசெந்தமிழிலிவட்கிணையென்றேபுலவரொடுத்துச்சொல்லக்
குல்லைமாலிகைமவுலிமருமகணோர்மனோன்மணியாங்குணமிக்காளே.

அஷ்டாவதானம் - பூவை - கலியாணசுந்தரமுதலியார் மாணாக்கர்

## வல்லி - ப - தெய்வநாயகமுதலியாரவர்க ளியற்றியது.

ஒருவளெனுஞ்சொல்லொன்றைச்செந்தமிழிலுண்டாக்கியுலவச்செய்து
மருவியபொறுமையினல்வந்தெதிர்த்தபலகவிஞர்வாயைப்பூட்டிப்
பெருவெற்றிகொண்டபண்டிதைமனோன்மணிமாதுபேசுமுல்லை
வருவிமலைக்கந்தாதிபாடியதும்வியப்பாமோமதிமிக்கீரே.

வேலூர்-மண்டிவியாபாரம்

## ப-தா-கல்வராயப்பிள்ளையவர்களியற்றியது.

நேரிசைவெண்பா.

மாயனிளக் தங்கைமுல்லை வாயிற் கொடியிடைப்பெண்
ணயகிக்கோரந்தாதி நாட்டினு—ணேய
தனோன்மத்த மேருவெனத் தன்னிகர்வாழ் வெய்து
மனோன்மணியா நற்பா மகள்.

உ

சிவமயம்.

தேவிசகாயம்.

# திருமுல்லைவாயில்

# கொடியிடைநாயகியந்தாதி.

## காப்பு.

### சங்கற்பவிநாயகர்.

கடிமணமார் முல்லைச்சங் கற்பமுன்னோ னெந்தாய்
கொடியிடையா ளந்தாதி கூறும் — படியருளாற்
"பாட்டுவித்தா லாரொருவர் பாடாதா" ரென்றசொல்லை
நாட்டுவித்தா னென்பாலிந் நாள்,

### உபாசனாதேவிவணக்கம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பூவையர்க ளாமலர்மா திருவருந்தங் கணவருடன் புகழ்ந்தேத் நாளுங்
காவையரு ளெனமனத்துத் துதித்தேத்தி வாய்பொத்திக் கரங்கள் கூப்பிச்
சேவைசெய்து புடைமருவ வீற்றிருந்து கடைக்கணிக்குஞ் செல்வியாய
காவையகிலாண்டநா யகியடியை யெப்போதுங் கருத்துள் வைப்பாம்,

## நூல்.

### கட்டளைக்கலித்துறைகள்.

சீரார் வடதிரு முல்லைவா யென்னுஞ் செழுநகரி
லேரார் கமலைநல் வாணி புலோமசை யேவல்செய
நீரார் சடைக்கங்கை யார்மாசி லாமணி நேயரிடந்
தாரார் கொடியிடை நாயகி யான தயாநிதியே. (க)

நிதியே சுகாநந்த வாழ்வே நினையர்க ணெஞ்சிலுறை
மதியே மதிமுக சேவைகண் டோர்க்குறு வாழ்வளிக்குங்
கதியேயென் தீவினை யாவுங் களைந்திட்டுக் காட்சிநல்கத்
ததியே கொடியிடைச் சங்கரி யாய தயைக்கடலே. (உ)

கடலிற் பிறந்த வமிர்தத்தையுண்டு களிப்படைந்தே
யடலிற் பெரியவர் வாழ்வுவந் தானு மகமகிழே
னுடலிற் பெரியவர் தங்காய் பவானி யுமையவளே
வடதிரு முல்லையி னுளேநிற் கண்டு மகிழுவனே. (௩)

கண்டேனென் றாயைப் புகலிக் கவுணியர் காதலித்துட்
கொண்டே யிருக்க முலையமு தீந்த குணவதியை
வண்டா மரையனு மான்முத லோரும் வணங்கிநிதங்
கொண்டா டுமுல்லைக் கொடியிடை யாளைமுற் கூர்தவமே. (௪)

தவமே புரிந்துபைந் தண்மல ரிட்டுச் சரண்புகுந்தா
லவமாக் கிடாதெனை யாதரித் தாண்டிங் கடர்வினையாம்
பவமே யொழித்துநற் பேற்றை யளிக்கும் பசுபதியாஞ்
சிவமே மகிழத் திருமுல்லை வாயிலெஞ் சேயிழையே. (௫)

சேயேன் படுந்துய ரிவ்வள வென்று செகமதனில்
தாயே புகலுதற் கேலாம லிங்குத் தவித்திடுவேன்
நாயேன் மலவினை யாவையு நீக்கி நலங்கடரு
வாயே வடதிரு முல்லையில் வாழ்கின்ற மாணிக்கமே. (௬)

மாணிக்க வாசகர் வாசகங் கேட்டு மகிழ்ந்தருளு
மாணிப்பொ னம்பலத் தானந்த வள்ள லருகிருந்து
வேணிக் கிருந்திசை காணு தருநட மேயதிருப்
பேணிக் களித்திடு முல்லையி னின்ற பெருமையளே. (௭)

பெருமையுந் தாழ்மையு மில்லாது வாழும் பெரியவர்த
மருமையை யான்கண் டவர்பணி செய்ய வருள்புரியி
னொருமைக் கடாவின் வருநமன் செய்யு மிடரகற்றி
யிருமையும் வாழ்குவன் முல்லையி னின்ற விறையவளே. (௮)

இறைப்பொழு தாயினுஞ் சும்மா விருந்திட வெண்ணினனேல்
மறைப்பெனும் பாச மிழுத்தெனை வாட்டி மயக்குமந்தக்
குறைப்பழி நீக்கி யெனையாள வேண்டுங் குளிர்புனல்சூழ்
நிறைத்தடம் வாய்ந்த திருமுல்லை வந்தரு ணின்மலையே. (௯)

நின்போ லருளுடை யார்தமைக் கண்டில னேயம்வைத்துத்
துன்பே யொழித்துன் றிருவடி தம்மைத் துதிபுரிந்தெ
னன்பே யுருகிட நெக்குவிட் டேனெஞ் சிளகிநிற்கு
மன்பே யருளுகண் டாய்முல்லை வாழுமென் னாரமுதே. (௧௦)

ஆரணன் மாலு மடிமுடி தேடிய வற்புதமார்
பூரணற் குண்மைப் பொருளிஃதென்றப் பொருள்விரித்த
காரணங் கேட்டுக் களிப்புடன் மைந்தனைக் காதலித்த
வாரணம் போன்ற தண்முடை யாய்முல்லை மாதரசே. (௧௧)

மாதவத் தக்கன் வளாயன் வழுதி மகளென்வுஞ்
சீதரன் றங்கை யெனவுஞ் செருக்குவர் சித்திரமே
யோதரு மைந்தொழி லுஞ்சிவத் துற்றே யுளுற்றிடுவான்
பாதவஞ் சூழ்திரு முல்லையி னின்ற பராபணையே. (௧௨)

புரையினை முல்லைப் பசுங்கொடி தன்னைப் பணிந்திடுவோர்
தரையிடை மிக்க தனபதி யாகித் தழைப்பதுடன்
நரைதிரை மூப்பு முதலனவாகு நலிவகன்று
நிரையிந்த்ர போகமு மெள்வ ரதீதநன் னீணிலத்தே. (கரு)

நிலத்தே பிணியுற் றுழலாம லன்பர்க ணேயமெனு
நலத்தோ டுறைந்து மறுமையின் முத்தியை நண்ணிடுவான்
தலத்தே சிறந்திடு முல்லையி லேயுறை சாம்பவிமங்
கலத்தோடு நின்றிடுங் காட்சியைக் கண்டு களிக்குவனே. (கசு)

களிக்கும் படியரன் றன்றீ விழியினிற் கந்தனைப்பெற்
றளிக்கும் படிசெய் தவுணர்கள் யாரு மவர்நகர்விட்
டொளிக்கும் படிவிண் ணமரர்கள் வாழ்வடைந் தோங்கிநிதந்
துளிர்க்கும் படிசெய்தை முல்லையிலேவந்த சுந்தரியே. (கஏ)

சுந்தர மான வதனமும் வாள்விழித் தோற்றமுமோர்
மந்தரம் போன்றிட்ட கொங்கையும் பட்டணி வண்ணங்களுங்
கந்தர வார்குழ லாமெழி * லொய்யிலுங் கண்டுகண்டு
சிந்துர மேனிய னின்வச மாயினன் செங்கரும்பே. (கஅ)

கரும்பே நிகர்மொழி யாய்கற்றை வாய்ந்த கதிர்சடையோன்
பெரும்பாக் கியமென முல்லையில் வந்துநிற் பேசுபவர்
விரும்பாத போகங்கள் யாவு மடைந்து வினைக்கிடமா
மிரும்பா மனமுங் கசிந்திடப் பேரரு ளெய்துவரே. (கஎ)

எய்துநற் பாக்கிய மென்போடி யாக்கை யிளகிமலர்க்
கொய்துநல் லன்பொடு சாத்திப் பணிந்து குழைந்துருகி
மெய்யது வேர்த்திடக் கற்போன்ற நெஞ்சமும் வெவ்வழல்வெண்
ணெய்யது போல வுருகிடு முல்லையி னின்றிடினே. (கஅ)

நின்றுளை முல்லையி லேத்தித் துதிக்கின்ற நேயமதால்
மன்றுடு மீச னருள்வாய்க்கும் வானகம் வாழவைத்த
குன்றுடு மையன் குகன்சேய் குழகன் குருபரன்றாள்
நன்றாகச் சேவித்திங் குய்யும் படிக்கரு ணல்கிடுமே. (ககூ)

நல்லோர்க ணேசமு நின்பூசை செய்கின்ற ஞானமுமே
யல்லாதென் னெஞ்ச மலையா திருக்க வருளுகண்டாய்
கல்லாலின் கீழன்று நால்வர்க் கருளிய கண்ணுதலாம்
வல்லார் விரும்புந் திருமுல்லை வாழ்கின்ற மாதவமே. (உ0)

மாதலத் தோங்கிடு முல்லைக்கண் வாழ்கின்ற மாமருந்தைப்
பூதலத் தோர்களு மீதலத் தோர்களும் போற்றிநின்று
பாதகந் தீர்ந்திட் டருளது வாய்ந்திட்ட பண்பதுபோல்
வாதனை நீங்கிட வாழ்வித்தல் வேண்டுநன் மாமணியே. (உக)

---

* விரித்தல்விகாரம்.

மணிசேர்ந்த கண்டனுங் குன்றுதொ ளுடிய மாமகனு
மணிவேற் படையுட னுதரித் தாண்டிங் கரும்பிறவிப்
பிணிபோக்கி யேழையள் பேரருள் பெற்றுப் பிழைத்திடற்குப்
பணியேவ லேசெய்து முல்லையில் வாழ்ந்திடப் பண்ணுவையே. (உஉ)

பண்ணுட னின்மேற் கவிதனைப் பாடிப் பழகுகிலேன்
மண்ணினி லேழை யொதியது போல வளர்ந்திடுவேன்
கண்ணுத லோடு விடைமீது வந்து களிப்புடனே
தண்ணரு ளீயக் கடைக்கணி முல்லைத் தயாநிதியே. (உ௩)

நிதிவந் திடினு மிமையா விழிபெறு நேர்மையர்தம்
பதிவந் திடினு மகிழேன் மகிழ்வதுன் பண்பினுக்கே
விதியுடன் மாலு மடிமுடி தேடும் விமலர்மகிழ்
சதிர்பெற நின்றிடு முல்லையில் வாழ்கின்ற சங்கரியே. (உ௪)

கரியுட னுளி விளையாடு காளத்திக் கண்ணப்பனுர்
பரிவுடன் றந்திட்ட வூனதைத் தின்ற பரமருடன்
பரிபுரச் சிற்றடி வாணி புலோமிசை பாற்கடலாள்
சரிவளை மாதர் தொழவாழ்வை முல்லையிற் சாம்பவியே. (உ௫)

சாம்போ துனக்குத் துணைவரு கின்றவர் தாமுளரோ
வீம்புடன் காலங் கழித்தே திரிந்து வெகுண்டனையால்
பாம்புடன் கங்கையுந் திங்களும் பூண்ட பசுபதியார்
தாம்புடை வைத்த வடமுல்லை தேவியைச் சார்மனமே, (உ௬)

சார்ந்தாரைத் தன்னடிக் கீழே யிருத்தித் தயையொடருள்
கூர்ந்தேதன் னுயக னேடுவந் தன்னர் குறைகளெல்லாந்
தீர்ந்தேசி வானந்த முத்திக் கரைவழி சேர்ந்துமனந்
தேர்ந்தே யிருக்கத் திருத்துவண் முல்லைத் தினகரியே. (உ௭)

தினமுனைச் சேர்ந்து களிப்போ டிருக்குஞ் சிவசங்கரன்
மனமுவந் தேயொரு மாற்றுளைச் சென்னியில் வைத்திருந்துஞ்
சினமின்றிப் பாகத்தி னீங்காது வாழுஞ் செயல்கண்டிடில்
கனமிகு நின்பொறை யார்க்குண்டு முல்லைக் கனங்குழையே. (உ௮)

குழைநக்க ரோட்டைத் திருநீல கண்டக் குயவரொரு
பிழையொன்றி லாது புரந்துவைத் திட்ட பெருமைகண்டும்
பழையோடு தந்தனன் றுவென்று சூள்செயப் பண்ணியவர்
குழைய வைத்தாரது செய்யேல் வண்முல்லைக் கொடியிடையே. (உ௯)

கொடிபோ லிடையுமங் கொவ்வைச்செவ் வாயிற் குயின்மொழியுங்
பொடிபூசும் வேணிப் பிரான்கண்டு கெஞ்சும் பொலிவுடனே
மடிமீதின் மைந்தர் விளையாடிக் கொஞ்சிடும் வாழ்வதனு
லடியேனை நீமறந் தாய்போலு முல்லையி லாரணங்கே. (௩௦)

அணங்கினர் மங்கல நாணிலை நிற்க வசுரர்குல
முணங்கும் படிவடி வேலினைத் தந்திட் டுயர்நிலத்தோர்
வணங்கும் படிசெய்து மைந்தனுக் காசி வயங்குமுன்றன்
குணங்கண்டு முல்லையி லேத்தின னேழை குறையறவே. (௫௧)

குறையற லாங்குண மொத்துக் கரைந்து குழைந்துநின்றால்
தறைமீ துனதடி யாரருள் பெற்றுச் சயம்பெறலா
மறையோது நின்மல நாதர் மகிழும் வடமுல்லையி
லுறையு முனதடி வாழ்த்தித் துதித்திங் குனைப்பணிந்தே. (௫௨)

பணிந்தே னினதிருப் பாதாம் புயத்தைப் பகலிரவா
யணிந்தேன் விபூதி யுடனக்க வொண்மணி யம்பணியாய்த்
துணிந்தேநின் றன்னடி யாரின தேவற் றொழும்பதனைத்
தணிந்தே யருளுதி முல்லையில் வாழுந் தயாபரியே. (௫௩)

பரிவேண்டிப் பாண்டியன் செய்திடுந் துன்பினைப் பார்த்திரங்கி
நரிபரி யாக்கித் திருவாத வூரர்க்கு நல்குமுன்ற
னுரியோ னுடன்முல்லை தன்னில்வந் தேழை யுளமகிழப்
பரிவோடு வந்தெனைக் காத்திடல் வேண்டும் பனிமொழியே. (௫௪)

பனிமலை யோன்பெற்ற பச்சிளங் கிள்ளையைப் பார்வதியைக்
கனிவுட னேத்தித் துதிக்கின்ற வன்பர் கருத்தறிந்து
தனிமலர்ச் சேவடி தந்துபின் னங்கவர் தம்மைவிண்ணோர்
நனிதொழச் செய்வை திருமுல்லை வந்தவென் னாயகமே. (௫௫)

நாயினன் சன்மப் பிணியான் மெலிந்து நலிவுற்றுமே
தீயினிற் பட்ட புழுப்போல வாடித் திகைக்கையிலே
தாயிற் பரிந்தா தரித்திட முற்றுந் தயை செய்குவாய்
ஞாயிலை ஞாயிறு தாவிடு முல்லையின் ஞானவித்தே. (௫௬)

வித்தா கியசஞ் சிதமொழித் தென்றன் வினையகற்றிப்
பித்தா கியமனச் சஞ்சலந் தீர்த்திடப் பேரின்பமாஞ்
சத்தா கியவருள் வந்தெனை யெய்தத் தகவருளா
முத்தா கியமொழி யாய்முல்லை வாழ்ந்திடு முக்கனியே. (௫௭)

முக்கட் பகவனு நீயுநின் மைந்தனு மொய்வனத்தி
லக்கு மணிதரித் தேவேட ராகி யருச்சுனன்செய்
தக்க தவத்தைத் கலைத்துமொத் துண்ட சமயமதிற்
பக்கத்தி னின்று நகைப்பழகோ முல்லைப் பைங்கொடியே. (௫௮)

கொடியே மரகதக் கொம்பே யிளவஞ்சிக் கோமளமே
யடியேன் மிசையெப் பிழையிருந்தாலு மருள்சுரந்திட்
டிடிபோ னமன்வந்து துன்புசெய் ஞான்றவ் விடரகற்றி
யடியா ருடன்வந்திங் காதரிப் பாய்முல்லை யானந்தியே (௫௯)

ஆனந்தத் தாண்டவ மாடும்பிரானன் றமரருய்யத்
தானருந் தூங்கடு கண்டத்து நிற்பித் ததையுணரா
தீனஞ்செய் தக்கன் மகளென்னும் பேரையினி தொழித்தாய்
ஞானம் பகருஞ் சுகச்சோலை முல்லையி னரணியே. (சo)

நாரண னோடு பிரமனுந் தேடி நணுகவொண்ணுக்
காரண னுன்ற னருமையைக் கண்டு கணிப்பதல்லால்
தாரணி யோர்களு ளாரறி வாருன் சதிரதனை
வாரணி மென்முலை யாய்முல்லை மாநகர் வந்தவளே. (சக)

வந்தே தமியன் படுந்துயர் யாவையு மாற்றுவித்துச்
சிந்தா குலங்கெடக் கண்பார்த் தருள்சிவ காமியெனு
மெந்தா யுனையன்றி வேறு கதியில்லை யென்றனக்கே
தந்தாள வேண்டுந் திருமுல்லை வாழ்கின்ற சங்கரியே. (சஉ)

சங்கநற் கீரன் றமிழ்க்கே யிரங்கித் தனிமுறையை
மங்கப் பிளந்திட்ட மைந்தனைப் பெற்று மகிழ்வடைந்தாய்
தங்கவெற் போனு மரியயர் தேவருந் தான்மகிழ
சிங்காத னத்தினில் வீற்றிட்ட முல்லைத் தினகரியே. (சஙு)

தினமப்பர் செய்த விருவகைத் தொண்டின் செயற்கரனோ
மனமொத்து வட்டமில் பொற்காசு தந்த வகையறிந்துங்
கனநித்த மேயும் வடமுல்லை வந்து களித்திடுநல்
லனமொத்த தேவி யெளியனுக் கொன்று மளித்திலளே. (சச)

அளித்தும் புரந்து மழித்து மறைத்து மனுக்கிரகந்
தெளித்து முலகை நடத்துஞ் செயல்களைத் தேவியுன்பாற்
றுளித்த வருளினி லோராயி ரத்தொன்றிங் கோர்நொடியிற்
களித்திடச் செய்திடு முல்லையி லென்னிரு கண்மணியே. (சரு)

மணியே மலைக்கோன் றவத்திற் கிரங்கி வரமருள்சற்
குணியேநல் வாழ்க்கைக் குலதெய்வ மேயென் கொடுவினையாற்
பணியேன் பிழைபல யாவும் பொறுத்த பசுங்கொடியா
மணியே திருமுல்லை வாழ்கின்ற சுந்தர வந்தரியே. (சசா)

அந்தரத் தேவர்கள் சூர்செயுந் துன்பி னலக்கணுற்றுச்
சிந்துர மேனியன் றன்னோ டியம்பச் சிறந்தமுல்லைச்
சுந்தரி யேயுனைத் தான்மணந் தேயவர் துன்பொழித்தார்
கந்தர வார்குழற் றாயே தமியனைக் காத்தருளே. (சஎ)

அருளே நிறைந்தநி னன்பர்க ளேவ லனுதினமுந்
தெருளோடு நான்செயச் சித்தியெல் லாந்தந்து தீங்குறுத்து
மருளேத நீக்கி யெனையுன் னடியினில் வாழவைத்தே
யிருளொன்ப தோடு முல்லையில் வந்தா யிமாசலையே. (சஅ)

சலந்தனி னின்றுஞ் சருகைப் புசித்துந் தணலெரித்து
மலமதின் றுன்பினைத் தாமகன் றோர்நின் மகிமைகண்டார்
நிலமதிற் பொய்யொடு வஞ்சகஞ் சூது நிறைந்துளநான்
றலமதி லெங்ஙன முய்ந்திடு வேன்முல்லைத் தாயகமே. (சகூ)

தாயே யுனையன்றி வேறு கதியிலைத் தாரணியில்
நாயேனைக் காத்துப் புரந்தா தரித்திடு நல்லிமவான்
சேயே திருமுல்லை வந்தடைந் தோர்துன்பந் தீர்த்தருளு
வாயே கிருபைக் கடலா கியவென் மனோன்மணியே. (ருo)

மணிபோன்ற செந்தமிழ் பாடவல் லோர்க்கருள் மாவிடையோ
னணிபூண்ட கங்கையைத் தன்றலை மீதில்வைத் தாதரித்துந்
தணிவாகப் பாகத்தில் வாழுமுன் னன்பு தனையறிந்தேன்
பணியாத வென்பிழை முல்லையிற் றீர்த்தலொர் பாரமன்றே. (ருக)

அன்றோர் தினந்தனி லாரூரர் தன்பா லணுகிமுலை
குன்றே யனைய பரவை யிணங்கிடக் கூட்டிவைக்க
நன்றே யுழன்றவுன் னாயகன் செய்தியை நன்கறிந்து
மன்றேறி நின்றவர் தன்னொடு முல்லையில் வாழ்வதென்னே. (ருஉ)

தென்னவ ராகிநற் சைவப் பயிரைச் செழித்திடச்செய்
மன்னவ ராண்ட மதுரைப் பதியினின் மானவர்முன்
கன்னலைக் கற்களி றுண்ணும் படிசெய்து காய்கதிரின்
றன்னிலை மாற்றிய சித்தன் மகிழ்முல்லைச் சார்ந்தவளே. (ருஙு)

சார்ந்தே தொழுத வபிராமி பட்டற்குத் தக்கவொளி
கூர்ந்தே நிலவுமுன் கம்மலை விண்ணிற் குளிர்மதியா
யார்ந்தே விளங்கப் புரிந்தவன் மாட்சியவனியிடைத்
தேர்ந்தே மதித்திடச் செய்தனை முல்லைச் சிவக்கொழுந்தே. (ருச)

கொழுந்தருந் துங்குயி லாகி மறைந்திட்ட கோன்றுயரி
லழுந்தா திருக்க வவுணர்க டம்மை யறக்களைந்து
செழுந்தேன் மொழித்தெய்வ யானையை யீந்திடச் சேர்த்தணைத்தோன்
றொழுந்தே மலர்ப்பொழின் முல்லையி லேநின்ற தோகையளே. (ருரு)

தோகையின் பொன்னனையா ளிடஞ் சென்றவ டன்பொழிக்க
வாகையி னுற்ற வகைமுற்றுங் கேட்டபின் வாதியென்றே
சாகையி லுள்ளசெம் பாதியைப் பொன்னெனத் தானமைத்த
வீகைமிக் கோனிடம் வாழ்வாய் திருமுல்லை யேந்திழையே. (ருசு)

ஏந்திழை மார்கள்பன் னீராயி ரவர்க ளில்லினிடைக்
காந்தனின் வாழ்ந்து கலந்தே யிருந்துங் கருதுதன்ம
வேந்தன்செய் வேள்வியி னைட்டிகன் றானென மேவியவி
சாந்தத் துடனடைந் தோன்றங்கை யாய்முல்லைச் சங்கரியே. (ருஎ)

சங்கர ஞருன் பெருமை தனைக்கண்டு தான்பயந்து
கங்கையை யோர்த் திடாவண்ண மேசடைக் காட்டில்வைத்துப்
பொங்கோடு வாழ்த்துமுன் செஞ்சர ணென்னைப் புரப்பதலா
லிங்காரெனக்குத் துணைமுல்லை வாழுமிமயவளே. (ருஅ)

இமையா விழிபெற்ற விண்ணவர் துன்பொழிந் தின்புறவு
முமைநாய கர்க்கன்றங் குண்மைப் பொருளை யுரைத்திடவுங்
கமையோடு கந்தனைத் தந்திட்ட வுன்றன் கருணையென்னே
எமையா தரிக்க வருவாய்நன் முல்லை யிருநிதியே. (ருகூ)

நிதியாவு நீங்கிடக் கைவிட்ட தங்கை நிலையுணர்ந்து
கதியேது மின்றி யருணையின் கோபுரங் கண்டுமுடி
யதிலேறி யாவி விடத்துணிந் தோனிட மந்தணனுய்த்
ததிவந்து காத்தோன் றனையீன்ற முல்லைத் தயாபரியே. (சுo)

பரிவுடன் கண்ணப்ப னெச்சிற் றசையினைப் பல்பொழுதும்
பிரிய முடனுண்ட பேயர்தம் வாழ்வே பெருமை யென்றங்
குரிமை யுடனவர் மோகத்தி லாழ்ந்திட் டுழல்வதென்னே
யரியயர் போற்றிட முல்லையில் வாழ்கின்ற வாரியையே. (சுக)

ஆரியன் போன்றொரு கன்னன்முன் சென்றங் கமர்க்களத்திற்
சீரிய வான்தரு மத்தினை யேற்றுச் செகமகிழத்
தாரிய பஞ்சா யுதத்துடன் காட்சி தனையளித்தோன்
பாரினின் மெச்சிட வாழ்வாய் வடமுல்லைப் பைங்கொடியே. (சுஉ)

கொடியாடு பொன்னெயில் சூழ்திரு முல்லையிற் கோமளமே
யடியேன் மிசையெப் பிழையிருந் தாலுநீ யாதரித்து
மிடிதீர்த்து நோயின் மிகைதீர்த்து நாளுநல் வீடடைவா
ணிடியேறு செங்கந் தனிற்காட்சி யீவை யிறையவளே. (சுங)

இறையவர் செய்கையை யோராத தென்முல்லை யேந்திழையே
குறைமதி தாங்கி யணங்கினைத் தாங்கிக் கொடியவிடக்
கறையினைத் தாங்கியென் பாரங்க மோடு கரத்துறலால்
மறைகளெ லாம்பித்த னென்றே யுரைத்திட வாழ்குவரோ. (சுச)

வாழ்வளிப் பாயுனை வாழ்த்தித் துதிக்க வரமளிப்பாய்
தாழ்வொன் றிலாத தரமளிப்பாயித் தரணி தன்னில்
பேழ்வந் தளிப்பாய் பிறையெயிற்றுச் சமன் பீடழிய
மாழ்கவைப் பாய்திரு முல்லையில் வாழும் வளமயிலே. (சுரு)

மயிலன்ன நீயிமக் குன்றிற் றவஞ்செய்து வாழுகையிற்
கயிலைப் பிரானொர் மறையவ னுயுனைக் கண்டணுகி
வயினுற நன்மணஞ் செய்யவந் தேனென வைதிட்டநீ
யயின்மேனி யைக்கண்டு வெட்கியதென் முல்லை யம்பிகையே. (சுசு)

/

அம்போ ருகத்தற் சிறையிட்டு வேதத் தருத்தமதை
நம்பனுக் கோதிப்பின் றென்மலேவாழு நயமுனியாங்
கும்பனுக் கேயுரைத் திட்டங் கசுரக் கொடியவராம்
வம்பரை வாட்டுங் குகனுடன். முல்லையில் வாழனமே. (சு௭)

அனமாகி யும்பன்றி தானுகி யுந்தேடு மன்றிருவர்
மனமாயி னுஞ்சென்று காண்டற் கரிய மலரடிகள்
தினமே நடிக்க விருவிழி நோக்கித் திகழுறுமுன்
கனமே யெவர்க்குண்டு முல்லையில் வாழ்கன சாம்பிகையே. (சு௮)

கனந்திகழ் மேனியங் கன்னிகை யேயுன் கழற்பணிசெ
யனங்கன் மனைவிக் ககமகிழ் வெய்திட வாண்டதுபோல்
தினந்துதித் தேத்திடு மேழைக் கிரங்காத் திருவருளென்
கனந்தவழ் சோலை வளர்முல்லை வாழ்ந்திடுங் கண்மணியே. (சு௯)

மணியேயென் கண்ணுண் மணியே திருமுல்லை வாயிலெந்தாய்
பணியேனின் னன்பரைத் தோத்திரம் பாடிப் பலபொழுது
மணியேனற் பூதியை யாவியோ டாக்கை யயர்ந்துருகேன்
பிணியேன்செய் தீவினை யெல்லாம் பொறுத்தருள் பேரின்பமே. (௭0)

இன்பாக வாரூரர் செய்மணந் தன்னை யிடர்செய்துபின்
னன்பாக மன்ற விரண்டினைக் கூட்டு மருட்செயலை
யுன்பாகம் வாழ்ந்திட்ட சேடியர்க் கென்றே யுவந்தனையோ
வென்பாக முற்றோ னுடனுறை முல்லை யிமையவளே. (௭௧)

இமையா விழிபெற்ற பண்ணவர் துன்பொழிந் தின்புறவுஞ்
சுமையாகப் பூமியைத் தாங்குமச் சேடன் றுயர்கெடவுந்
தமைவேண்டி னோர்துன்ப நீங்கவுஞ் செய்திட்ட சண்முகனை
யுமையவ ளேயுன் னருகில்வைத் தாய்முல்லை யுய்வதற்கே. (௭௨)

உய்யும் படிக்குனைப் பாடிநின் றேத்திடு முத்தமரி
னையந் தவிர்த்தவர் துன்பினை நீக்க வருளுறுநீ
கையுந் தலைமிசைக் கூப்பாது கண்ணுங் கசிந்துருகாப்
பொய்யரை யெவ்வித மாள்வாய் வடமுல்லைப் பொற்கொடியே. (௭௩)

கொடியவ ராஞ்சம ணாதி கலைகளைக் கொய்தெறிந்திட்
டடியார் குலச்சிறை நீண்மாறன் மங்கைக் கரசியெனுங்
கடிகமழ் ஞானப் பயிர்விளைத் திட்டநங் கண்மணிக்குப்
படிமிசைப் பொற்கிண்ணப் பாறந்த முல்லைப் பரிவினளே. (௭௪)

பரிவாக மேனையின் சங்கற்ப முற்றிடப் பண்டிமைய
கிரியோனைப் பூமி தனில்வரச் செய்தவன் கேண்மையளா
முரியோ ளுடன்வாவி மூழ்கிடக் கண்டங் குயர்பதவி
புரிவோடு தந்தநீ யாண்டிடுவாய் முல்லைப் பூங்கொடியே. (௭௫)

பூங்கா வனஞ்சென்று பன்மலர் கொய்துநற் பூசைசெய்த
பாங்கான பாலன் றனைநமன் வந்து பயமுறுத்தி
யாங்காரத் தோடு நெருங்குஞ் சமய மருளளித்த
நீங்காத காதல னோடுறை முல்லை நிறைமதியே. (எசு)

மதியா துனைத்தொழு தேத்தாப் பிருங்கிதன் மாதசையைப்
பொதியா தொழித்திடப் போக்கு வரவு புரிதலற்றுக்
கதியேது மின்றிட நின்னுதன்வேண்டக் கருணையுடன்
துதியோடு முக்கா லருளிய முல்லையிற் சுந்தரியே- (எஎ)

சுந்தர மான வதனமுந் தோகைச் சுரிகுழலு
மந்தர மேயிடை யாகியு மன்பி னருள்விழியு
மந்தர நேர்கொங்கை தம்மையுங் கண்டு மயங்கிவெள்ளி
சிந்துர மேனிய னின்வச முல்லையிற் சிக்கினனே. (எஅ)

சிக்க லடைந்தொரு மைந்தனுந் தாயுந் திகைத்திடும்போ
தக்கண மாமனுருக்கொடு வந்தங் கருள்சுரந்து
தக்க வழக்கினைத் தீர்த்துப் பொருளைத் தயைபுரிந்த
நக்க னிடத்தமர் வாய்வட முல்லையி னுயகமே. (எகூ)

நாயினுங் கீழ்ப்படு மேழையெற் குற்ற நலிவகற்றிச்
சேயினைப் போல வணைத்தா தரித்துச் செகமதிக்கத்
தாயினு மேம்பட்டு நின்றெளி ருந்தன் றனித்தமுல்லை
வாயில்வைத் தாள்வாய் நிருமல னோடுறை மாதவமே. (அ0)

மாதாவைப் போல வளர்ப்பவள் மீப்புகழ் வாழ்த்துநர்க்குத்
தாதாவைப் போலக் கொடுப்பவண் மாண்புறச் சார்ந்தவர்க்குப்
பாதார விந்த மளிப்பவள் சன்மம் பறித்ததற்பின்
வேதாவிற் கெட்டாது செய்பவள் முல்லையின் மேவுவளே. (அக)

மேவலர் முப்புர நீறுகச் செய்தபின் மீதியமுக்
காவலர் தம்மு ளொருவன் குடமுழாக் காட்டிடவு
மாவல ராய்ச்சிலர் வாயிலைக் காக்கவு மாக்குவித்த
சேவகன் றன்னொடும் வாழ்குவை முல்லைச் சிவானந்தியே. (அஉ)

சிவாலயந் தோறுந் தொழுது துதிக்குந் திறமுறவு
மவாவை யறுத்துப் பரமுத்தி ஞான வருளுறவுஞ்
* சுவானந்த மோர்வழி யிற்பட்டு நின்று துதித்திடவும்
பவானி யருளுவள் முல்லையில் வேண்டியபாக்கியமே. (அ௩)

பாக்கியம் பெற்றன ராரண னாரணன் பாலொளியோ
னாக்கி யளித்தங் கழிக்குந் திறத்தினை யண்டமதில்
வாக்கியந் தப்பாது முல்லை நகரினில் வாழ்ந்துநிதம்
யோக்கிய மாக நடந்திட்ட வுண்மையின் யூகையதே. (அச)

* சுவானந்தம் என்பது மனம்.

உண்மையுட னுனைப் போற்றித் துதிக்கின்ற வுத்தமரின்
வண்மையைச் சொல்லிட வாயேது கஞ்சமலர்த் திருவுந்
தண்மைய ளாங்கலை வாணியுஞ் சம்புவுஞ் சண்முகனுங்
கண்மைவைத் தாளுவர் முல்லையிலே யென்றன் கண்மணியே. (அரு)

மணிகட்டி நீதி செலுத்திய வாரூரின் மன்னவனைப்
பணிகொண்டங் காள்வதற் கெண்ணிப் பெரிய பசுவுருவாய்த்
திணிகொண்ட வேமற்கன் றூக்கித் தொடரத் தெருவில்வரு
மணிகொண்ட நாயக னோடுறை முல்லையி லாயிழையே. (அசு)

இழைநுழை யாதநின் கொங்கைக டம்மா லிளகிமிகக்
குழைந்திட்ட நாயகற் கென்குறை முற்றுங் குறித்துநிதம்
விழைவுறச் செய்யா திருப்பதென் கொல்லோ விசும்பளவுங்
கழைவனஞ் சூழ்திரு முல்லையில் வாழ்கின்ற காரிகையே. (அஎ)

காரிகை யேநின் மணவாள னோடு கயிலைதனிற்
சாரிகை யாடிடும் போதுமா யன்றனைச் சாட்சிவைத்திங்
காரிதிற் றோற்றவ றொன்ன வவன்பொய் யறைதரவும்
பாரினிற் பாம்பாய்ச் சபித்திட்ட முல்லைப் பசுங்கொடியே. (அஅ)

கொடியாடு பொன்னெயில் சூழ்திரு முல்லையிற் கோமளந்தன்
னடியாரை யாளத் துசங்கட்டி நின்றிங் ககிலமதில்
மிடிபோக்கித் தீவினை யாவுந் துடைத்து விரிநரகை
யடியோடு மாற்றுவ ணிச்சய மாமிச்சொ லன்பர்களே. (அகூ)

அன்பரைக் காக்குங் கருணை விழிகளு மன்பிலரை
வன்புடன் காக்கும் வலியையுங் கண்டு மனங்குழைந்தே
யென்புட னுக்கை யியாவுந்தளர்ந்திங் கிளகிநின்றேன்
துன்புசெய் யாதெனை யாதரி முல்லைச் சுகமுகிலே. (கூ0)

முகிலைப் பழித்த குழற்பின்னல் மேவ முருகுயிர்சேர்த்
தகிலூட் டியகொங்கை தாங்கா விடையு மசைந்தொளிரச்
சிகிபோ லசைந்தென் முனமாக வந்திச் செயிரொழித்தே
யகிலம் புகழ்ந்திடக் காட்சிதந்தாண் முல்லை யானந்தியே. (கூக)

ஆனந்த மாயென் னறிவாய் விளங்கிய வற்புதமே
யீனந் தருமென் னுடலினை யேமனிடர் செய்யவும்
ஞானன் படைக்கவு மொண்ணு திருக்கவுன் னல்லருளால்
வானத்தர் போற்றிட வாழ்வளிப்பாய் முல்லை வண்மயிலே. (கூஉ)

மயிலோனுந் தும்பி முகத்தோனு மாலு மலரவனுங்
கயிலாய னும்வேள்வி வேந்தனு மற்றைக் கடவுளரு
மயில்போல் விழியுடை யாரணங் கேநின் னருளதனுற்
செயலுற்று வாழ்ந்தனர் முல்லையிலே நின்ற சேயிழையே. (கூங)

இழையோ விடையுடை வண்டோ தரிபா லினிமையதாய்க்
குழைநக்கர் சென்றதி ராவணன் காணக் குழவியதாய்
விழைவுடன் தோன்றக் குறத்திநீ யாக விளங்கியதால்
பிழையொன் றுங் கண்டில னற்சூழ்ச்சி முல்லைப் பிடியிடையே. (கூச)

இடைவிடா துன்றனை யேத்தித் துதித்திங் கிறைஞ்சுநர்க்குத்
தடைபடா துன்னருள் வாய்ப்பது சத்தியஞ் சத்தியமே
கொடையாளி யாய்வந்து முப்பத்தி ரண்டறங் குற்றமற
மடைதிறந்தா லென்ன வீபவள்காண் முல்லையில் வாழ்பவளே. (கூரு)

வாழ்நாள்க ளெல்லா மவமாக்கி நின்றனை வாழ்த்தறியேன்
மாழ்தல்கொண் டேமண்ணின் வாழ்ந்தே னிரண்டுகோல் மாடதுபோல்
தாழ்தலைச் செய்யாது முல்லையி னின்னிரு தாண்மலர்க்கீழ்
பேழ்வுட னென்றனை வாழ்விக்க வேண்டும் பெருந்தகையே. (கூசு)

பெருமானை வேதப் பெருந்தகை தன்னைநற் பெற்றியனை
யிருமானைத் தன்னிடம் வைத்திட்ட வெங்க ளிருநிதியை
யொருமானை யெய்தவன் காணுப் பொருளை யுவந்தணைந்தாய்
வருமானைக் காலிட றச்செயும் வண்முல்லை மாதவமே. (கூஎ)

மாதவச் சூழலில் மால்விடை யானுனர் வயோதிகனாய்
நீதவஞ் செய்கையில் பற்பல நிந்தை நெடிதுரைத்து
மாதரத் தோடவன் றெல்லுருக் கண்டபி ன்புடனே
காதலுற் றேமணம் பூண்டாய் திருமுல்லைக் காரிகையே. (கூஅ)

கார்போல நின்னரு டன்னைப் பொழிந்து கடைக்கணித்துச்
சீர்வாய்ந் திடச்செய்த வென்றனைக் கஞ்சன் சிருட்டியினால்
பார்மீது வந்திடப் பண்ணுது காத்துப் பதமடையு
மோர்வாய்ந் திடும்படி செய்திட வேண்டு மிமாசலையே. (கூகூ)

இமையவன் செய்திட்ட புண்ணிய மேதென் றியம்பிடுவே
னுமையான முல்லைக் கொடியினைப் பெண்ணுக வுற்றதுவும்
நமையா தரித்தரு ணம்பன் மருகனாய் நண்ணியது
மமையைங் கரன்குகன் பேரரு மான ததிசயமே. (க00)

சயரோகஞ் சூலை பெருநோய் மகோதரஞ் சன்னிகுளிர்
வியர்வைச் சுரமஷ்ட குன்மந் தலைவலி மேகரண
முயல்வலி யாவும் பறந்தோடுஞ் சூரியன் முன்பனிபோ
லயனரி போற்றிடு முல்லைச் சிவையி னடியருக்கே. (க0க)

அடியாளிற் கொண்டனள் முல்லை மனோன்மணி யன்னையதால்
குடியான வாந்தி யருசி யிடுப்புநோய் குன்மமுதற்
படியா யிறக்கி யுடலை வளர்த்திடும் பார்தனிலே
செடியால் வளர்ந்த வுறுப்பாகு மென்மதர்ச் சிரகமே. (க0உ)

வாழி - வெண்பா.

வாழிதிரு வெண்ணீறு வாழிருத் ராக்கமணி
வாழிபஞ் சாக்கர மாமந்த்ரம் - வாழிநின்
னற்புதல்வர் வாழிநின் னாயகனார் வாழிநின்
பொற்சரண மென்னுட் பொலிந்து.

கொடியிடைநாயகியந்தாதி முற்றிற்று.

உ

சிவமயம்.

## இந்நூலாசிரியரியற்றிய நூல்களுள் அச்சிடப்பட்டன.

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| பழனிப்பாமாலை.<br>பழனியிரங்கல் விருத்தப்பதிகம்.<br>பழனி வெண்பாப்பதிகம். | 0 | 0 | 6 |
| திருவாமாத்தூர் அழகியநாதர் பஞ்சரத்தினம். | 0 | 0 | 3 |
| சென்னைக் கந்தசுவாமிப்பதிகம். | 0 | 0 | 0 |
| திருவானைக்கா அகிலாண்டநாயகியந்தாதி. | 0 | 1 | 0 |
| திருமுல்லைவாயில் கொடியிடைநாயகியந்தாதி. | 0 | 1 | 0 |

## அச்சிடப்படுவன.

திருமயிலைக் கற்பகவல்லியந்தாதி.
திருக்கழுக்குன்றம் திரிபுரசுந்தரிமாலை.
பழனிச்சந்நிதிமுறை.
பழனிச்சிங்காரமாலை.
பூவைச்சிங்காரசதகம்.
குன்றத்தூர் பொன்னியம்மன்பதிகம்.
புதுவைக் காமாட்சியம்மன்பதிகம்.
"ஒருவனென்னுஞ் சொல்லின்மேலெழுந்த வினாக்களும்" விடைகளும்.
தனிப்பாடற்றிரட்டும் பலபாடற்றிரட்டும்.
மனோன்மணீயம். (வைத்தியநூல்.)

௧௪ - முல்லாவீதி - சென்னை.